B4 062

Vaaname Ellai

படிக்க • பயன் பெற • பகிர்ந்து கொள்ள

# வானமே எல்லை

இது ஒரு சுயமுன்னேற்ற மாத இதழ்

Canada

இதழ் 06 ஜூலை 2008

2 டொலர் பவுண்ட்ஸ் யூரோ 50 ரூபாய்



ஆசியாவின் பில்கேட்ஸ்



பட்டை தீட்டாத வைரங்கள்



கடன் வாங்கலையோ? கடன்!



குறிக்கப்படாத குறிக்கோள்கள்

Students' Corner in English

A PERSONAL DEVELOPMENT MAGAZINE

Vaaname Ellai

படிக்க • பயன் பெற • பகிர்ந்து கொள்ள

# வானமே எல்லை

இது ஒரு சுயமுன்னேற்ற மாத இதழ்

Canada

இதழ்: 06 ஜூலை 2008

**ஆசிரியர்:**
கிரி வரதராஜன் MSc. Eng.

**கௌரவ ஆலோசகர்:**
திரு. என். சிறிரஞ்சன் MBA.

**வடிவமைப்பு / அச்சமைப்பு:**
குணா / கிருஷ்ணா (Adco Graphics)

**விளம்பரத் தொடர்புகளுக்கு:**
ரதன்: 416.918.2414
ஜே: 416.258.3731

**மொன்றியால் விளம்பரத் தொடர்புக்கு:**
சிவா: 514.984.6853

**மின்னஞ்சல்:**
info@vaaname-ellai.com

**இணைய முகவரி:**
www.vaaname-ellai.com

**தொலைநகல்:**
905.624.4006

**அஞ்சல் தொடர்புகளுக்கு:**
Vaaname Ellai
P.O.Box No 11524
600 The East Mall,
Toronto, ON M9B 6L1
Canada

**வெளியீடு:**
Success Books & Audios

**வெளிநாட்டு விநியோகத் தொடர்புகளுக்கு:**
USA: +18622071411
UK: +442085518951
Germany: +49719158125
France: +33139889955
Australia: +61356748222
Malaysia: +6042839749
Sri lanka: +94112553341

வானமே எல்லை தவறாமல் உங்கள் இல்லம் வந்து சேர சந்தா தாரராகுங்கள்!

## இன்றைய சிந்தனை...

"தலைமைப் பண்பு என்பது, சாதாரண மனிதர்களிடமிருந்து அசாதாரணத் திறமைகளை வெளிக்கொண்டு வருவதாகும்"

- பிறையன் ரேஸி

## ஆசிரியரிடம் இருந்து...

அன்பான வாசகர்களுக்கு வணக்கம்,

வானமே எல்லை அரையாண்டு இதழினூடாக உங்களை சந்திப்பதில் மகிழ்ச்சி. இவ்விதழின் உள்ளடக்கங்கள் உங்கள் வாழ்க்கையில் ஏற்படுத்தும் முன்னேற்றமே எமது வெற்றி.

தலைமை என்பது வெறும் பதவியல்ல. அது ஓர் பண்பு. ஓர் நல்ல தலைவனுக்கு அவனது குழுவினரின் செயற்திறனே சான்று. எவரால் ஒருவரின் திறமைகளை வெளிக்கொண்டு வர முடிகிறதோ அவரே சிறந்த தலைவர். இவருக்குப் பட்டங்களோ பதவிகளோ இல்லாவிடினும் அவரை மக்கள் பின்தொடர்வார்கள். தலைமை என்பது மற்றவர்களின் நலனில் அக்கறை கொள்வதும், அவர்கள் நலனுக்காக உழைப்பதுமாகும். இதன் பக்க விளைவே தலைவனின் முன்னேற்றமாக அமையும்.

நன்றிகள்

## இந்த இதழில்...

# ஆசியாவின்



*- கிரி வரதராஜன் -*

ஏழைக் குடும்பத்திலே எட்டுப் பிள்ளைகளுடன் நான்காவதாகப் பிறந்தான் அந்தச் சிறுவன். பள்ளிப் படிப்பினை முடித்துப் பல்கலைக்கழகப் படிப்பினை மேற்கொள்ள எண்ணி, பொறியியல் படிப்பிற்காகப் பல இடங்களுக்கு விண்ணப்பித்திருந்தான்.

இந்தியாவிலேயே பொறியியல் படிப்பு படிப்பதற்கு ஐ.ஐ.ரி (Indian Institute of Technology) பல்கலைக்கழகம் மிகவும் பெயர் போனது. இப்பல்கலைக்கழக அனுமதிக்கு மாணவர்களும் பெற்றோர்களும் தவம் கிடப்பார்கள் எனலாம். சில நூற்றுக் கணக்கான வெற்றிடங்களுக்கு விண்ணப்பம் செய்பவர்களின் எண்ணிக்கையோ மில்லியன் கணக்கில். அமெரிக்காவில் பொறியியல் துறைக்கு MIT (Massachusetts Institute of Technology) பல்கலைக்கழகம் எந்தளவு பிரபல்யமானதோ அதைவிட இந்தியாவில் அதிகம் பெயர்போனது இந்த ஐ.ஐ.ரி. இதில் படித்துக்கொண்டிருக்கும்போதே பெரிய பெரிய நிறுவனங்களிலிருந்து மாணவர்களுக்கு வேலை வாய்ப்பு தேடி வருவதுண்டு. அத்துடன் அமெரிக்கா போன்ற நாடுகளில்கூட ஐ.ஐ.ரி பட்டதாரி என்றால் வேலைவாய்ப்பு, மேற்படிப்பு விசா என்பன மிக இலகுவில் கிடைத்துவிடும்.

இந்த ஐ.ஐ.ரி யில் அந்த ஏழை மாணவனின் திறமைக்கு அனுமதியும் கிடைத்தது. ஆனால் அவனது ஏழ்மை அங்கு போகவிடாமல் தடுத்தது. வகுப்புக் கட்டணங்கள் கட்டமுடியாத நிலையில் அவனது தந்தை "படிக்கிற பிள்ளை எங்கு சென்றாலும் படிக்கும்" என்று, காசு கட்டாத இடமாகப் பார்த்துச் சேரச்சொல்லி விட்டார்.



# பில்கேட்ஸ்



குடும்ப நிலையை நன்கு உணர்ந்த நாராயணமூர்த்தி என்ற அவரது மகனும் மனம் கோணாது மைசூரிலுள்ள பொறியியல் கல்லூரியில் சேர்ந்து எலக்ரோனிக் துறையில் படிப்பை முடித்தார்.

பின்பு தனது மேற்படிப்பை (MSc.) ஐ.ஐ.ரி இல் தொடர அவருக்குச் சந்தர்ப்பம் கிடைத்தது. அதன்பின் அங்கு ஆசிரியராகக் கடமையாற்றிக் கொண்டிருந்தவருக்கு பல பெரிய நிறுவனங்களிலிருந்தும் வேலைக்கான அழைப்பு வந்தும்கூட அவர் அதை ஏற்றுக் கொள்ளாமல் ஆசிரியப் பணியிலேயே தொடர்ந்து இருந்தார்.

அப்பொழுது 1972ம் ஆண்டு ஐ.ஐ.ரி கான்பூரில் முதன்முதலாக IBM கொம்பியூட்டர் கிடைத்தது. அதனைப் படிக்கும் ஆராய்ச்சி வேலை நாராயணமூர்த்திக்குத் தரப்பட்டது. ஒரு நாளைக்கு 18-20 வரையான மணித்தியாலங்கள் வேலை செய்ய வேண்டும். இரவு பகலாக கடுமையாக உழைத்தார் நாராயணமூர்த்தி. கம்பியூட்டர்கள் பற்றி நிறையவே கற்றுக்கொண்டார்.

கம்பியூட்டர்களே இந்தியாவில் அறிமுகமாகாத நாட்கள் அவை. தனது 34 ஆவது வயதில் ஆறு நண்பர்களுடன் சேர்ந்து கம்பியூட்டர் சேவை நிறுவனம் ஒன்றை ஆரம்பிக்க முடிவு செய்தார். அதன் பலன், இந்தியாவின் தகவல் தொழில்நுட்பக் குரு என்றும் ஆசியாவின் பில்கேட்ஸ் என்றும் அழைக்கப்படும் என். ஆர். நாராயணமூர்த்தியின், இந்தியாவின் இரண்டாவது பெரிய கணனி மென்பொருள் ஏற்றுமதி நிறுவனமான இன்ஃ. போசிஸ் ரெக்னோலோஜிஸ் லிமிட்டெட் (Infosys Technoligies Ltd.) நிறுவனம்.

இதன் பின் இன்ஃபோசிஸ் நாராயணமூர்த்தி என்றே அழைக்கப்பட்ட இவர் 2003 ஆம் ஆண்டில் ஆசியாவின் சிறந்த தொழிலதிபர் என்று, போர்ச்சூன் (Fortune) சஞ்சிகையினால் கௌரவிக்கப்பட்டிருந்தார்.

250 டொலர் மூலதனத்துடன் மும்பாயில் உள்ள தனது தொடர்மாடி வீட்டுப் படுக்கையறையில் வைத்து அந்நிறுவனத்தினை மூர்த்தி ஆரம்பிக்கும் போது அவரிடம் எந்தவித பௌதீக மூலதனமும் இருக்கவில்லை. எந்த வியாபார நிறுவனத்தையும் கொண்டு நடாத்திய அனுபவமும் அவருக்கு இருக்கவில்லை. அவருக்கென்று வாடிக்கையாளர்கள் என்று யாரும் இருக்கவில்லை. எல்லாவற்றிற்கும் மேலாக கணனி மென்பொருள் தயாரிக்கும் நிறுவனத்தை ஆரம்பித்த மூர்த்தியிடம் கணனியோ அல்லது தொலைபேசி வசதியோ இருக்கவில்லை.

ஒரு தொலைபேசி இணைப்பினைப் பெற்றுக்கொள்வதற்கு மூர்த்தி ஒரு வருட காலம் காத்திருக்க வேண்டியிருந்தது. கணனிகள் சிலவற்றை இறக்குமதி செய்வதற்கு வேண்டிய அனுமதியினைப் பெறுவதற்கு 15 தடவைகள் இந்தியாவின் தலைநகரான புது டில்லிக்கு மூர்த்தி அலைந்து திரிய வேண்டியிருந்தது.

ஆனால், மூர்த்தியினால் அவ்வாறு ஆரம்பிக்கப்பட்ட நிறுவனத்தினை இன்று 91,000 பேரிற்கு அதிகமானவர்கள் தொழிலாற்றும் இந்தியாவின் மிகப்பெரிய மென்பொருள் ஏற்றுமதி நிறுவனமாக வளர்க்க முடிந்துள்ளமை அவரது முயற்சியாண்மை (Enterpreneurship) வல்லமைக்கு எடுத்துக் காட்டாகும்.

இந்தியாவிலும் உலகின் பலவேறு நாடுகளிலுமாக 40 அலுவலகங்களைக் கொண்டுள்ள இந்நிறுவனத்தின் தற்போதைய பங்குச்சந்தைப் பெறுமதி ஏறக்குறைய 30 பில்லியன் அமெரிக்க டொலர்களாகும்.

மூர்த்தியின் இன்போசிஸ் நிறுவனம்தான் அமெரிக்காவின் நஷ்டாக் (Nasdaq) எனப்படும் தொழில்நுட்ப பங்குச்சந்தையில் நிரற்படுத்தப்பட்ட முதல் இந்திய நிறுவனமாகும். 1999 ஆம் ஆண்டு இன்போசிஸ் நிறுவனம் நஷ்டாக் பங்குச்சந்தையில் நிரற்படுத்தப்பட்ட போது அதன் பங்கொன்றின் விலை 37 அமெரிக்க டொலராக இருந்தது. அது மார்ச் 2001 இல் 375 அமெரிக்க டொலர்களாக உயர்ந்தது.




நிறுவனம் சார்பாக நலப்பணிகளுக்காகவும் நலிந்தவர்களுக்கு உதவவும் செலவிடப்படுகிறது. உடல் நலம், சமூக முன்னேற்றம், கல்வி ஆகிய மூன்று தளங்களில் இன்போசிஸ் அறக்கட்டளை செயல்படுகிறது. உயர்கல்விக்கு உதவி, நடைபாதைக் குழந்தைகளை மீட்டல், மூடநம்பிக்கை மறுப்பு உள்ளிட்ட பல பணிகளை இன்போசிஸ் நிறுவனமும் அறக்கட்டளையும் செயல்படுத்தி வருகின்றன.

2007ஆம் ஆண்டில் 117 கோடி அமெரிக்க டொலர்களை இலாபமாகப் பெற்ற இன்போசிஸ் நிறுவனம் உலகளாவிய ரீதியில் பலநூற்றுக்கணக்கான நிறுவனங்களை தனது வாடிக்கையாளர்களாகக் கொண்டுள்ளது. இவற்றில் பெரும்பாலானவை உலகப் புகழ் பெற்ற அமெரிக்க நிறுவனங்கள் என்பதுடன், பல நிறுவனங்கள் ஃபோர்ச்சூன் 500 எனப்படும் அமெரிக்காவின் ஆகப்பெரிய 500 நிறுவனங்களுக்குள் அடங்குபவையாகும். மூர்த்தி இவ்வாறான பெரிய நிறுவனங்களின் தொடர்பையும், அவர்களுக்குத் தேவையான கணணி மென்பொருட்களைத் தயாரித்து வழங்கும் பாரிய ஒப்பந்தங்களினையும் இலகுவாகப் பெற்றுவிடவில்லை. முதலில் இந்நிறுவனங்களில் பிழைதிருத்தம் மற்றும் செயற்பாடுகளை பராமரித்தல் போன்ற சிறிய வேலைகளினையே மூர்த்தியின்

2000 ஆம் ஆண்டு நஷ்டாக் பங்குச் சந்தையில் பட்டியல்படுத்தப்பட்டிருந்த நிறுவனங்களின் பங்குகளெல்லாம் குறைந்து கொண்டு வந்து மொத்தப் பங்குகளின் சராசரி விலையானது 31.5% இனால் குறைவடைந்த போது இன்போசிஸ் பங்குகளின் விலை 12% இனால் அதிகரித்திருந்தது.

கணனி மென்பொருள் தயாரிப்பில் முன்னணி வகிக்கும் இன்போசிஸ் நிறுவனத்தை இவ்வளவு தூரம் வளர்த்து வெற்றியடையச் செய்தமையினாலேயே மூர்த்தி ஆசியாவின் பில்கேட்ஸ் என்று அழைக்கப்படுகின்றார். மூர்த்தி, பில்கேட்ஸ் அளவிற்கு இல்லாவிட்டாலும் இந்தியாவில் உள்ள மிகப் பெரிய பணக்காரர்களில் ஒருவர்.. ஆனால், மூர்த்தியின் வாழ்க்கை முறை மிகவும் எளிமையானது.

மூர்த்தி தனது சொந்தக் காரை அவரே ஓட்டும் பழக்கம் கொண்டவர். சாதாரண இந்தியர்களுடன் இந்தியன் ஏர்லைன்ஸ் விமானத்தில் பயணம் செய்வார். மூர்த்தியினை ஒத்த அமெரிக்க நிறுவனத் தலைவர்கள் தமது பாவனைக்கு என தனியாக நிறுவன ஜெட் ரக விமானத்தினை பயன்படுத்துவது வழக்கம்.

மூர்த்தி தனது மூன்று அறை வீட்டிலேயே குடியிருக்கின்றார். இவர் வீட்டில் வேலைப் பணியாளர்கள் எவரையும் வைத்திருக்கவில்லை. இவரது மனைவி சுதா தான் வீட்டில் சமையல் மற்றும் துப்பரவு செய்தல் வேலையினைக் கவனித்து வருகின்றார்.

வேலைத் தளத்தில் கீழ்நிலை ஊழியர்களைக்கூட சக பணியாளன் என்றே அழைக்கும் மூர்த்தி தனது ஊழியர்கள் அனைவருமே தலைமைப் பண்புடன் திகழவேண்டும் என்பதில் மிகவும் அக்கறை காட்டி வருவதோடு அதற்கான பயிற்சிகளையும் அவர்களுக்கு வழங்கி வருகிறார்.

ஆண்டு தோறும் 5 கோடிக்கும் மேலான தொகை, இவரது



## படித்ததில் பிடித்தது...

தொழிலில் சரிவைச் சந்தித்த ஒருவர், ஒரு மாறுதலுக்காகக் கடற்கரைக்கு வந்தார். இரண்டு குழந்தைகள் அழகிய மணல் வீடொன்றைக் கட்டிக்கொண்டிருந்தார்கள். ஏறக்குறைய கட்டி முடித்த போது ஓர் அலை வந்து மணல் வீட்டை அழித்தது. குழந்தைகள் அழப்போகிறார்கள் என்று நினைத்தார். அவை "கலகல" என்று சிரித்தபடி கைகோர்த்துக்கொண்டு சற்றே தள்ளிப்போய் இன்னொரு மணல் வீட்டைக் கட்டத் தொடங்கின.

வாழ்வின் ஏதோவொரு கட்டத்தில் வீழ்ச்சி நிகழும். அடுத்த முயற்சியை அதே உற்சாகத்தோடு தொடங்குவதே வெற்றிக்கு வழி என்பதை அந்தக் குழந்தைகளிடம் கற்றுக்கொண்ட மகிழ்வோடு அந்தத் தொழிலதிபர் புதிய உற்சாகத்துடன் புறப்பட்டார்.

இன்போசிஸ் நிறுவனம் பெற்றிருந்தது. ஆனால், பின்னர் மூர்த்தியும் அவரது ஊழியர்களும் அந்தச் சிறிய ஒப்பந்தங்களைப் பூர்த்தி செய்த விதத்தினைக் கண்டு வியந்த நிறுவனங்கள் பாரிய வேலைகளை அவர்களிடம் ஒப்படைக்கத் தொடங்கின.

மூர்த்தியின் அளப்பரிய வளர்ச்சிக்கு மூலதனமாக இருந்தவை அவரது சிறந்த தொலைநோக்கும் (Vision) முயற்சியாண்மையும், சிறந்த அறிவும், மனித நேயமும், கடுமையான உழைப்பும், அர்ப்பணிப்புடன் கடமையாற்றும் அவரது சகாக்களும் ஆகும். ❖❖

# சிகரத்தை



# அடைவோம்

பாகம் - 4



## உங்களிடம் ஒளிந்திருக்கும் வெற்றியடைவதற்கான ஆற்றலினை வெளிக்கொணரும் வழிமுறைகள்

**வா**ழ்க்கையில் வெற்றியடைதல் என்பது விதிகளின்படி தான் சாத்தியமாகின்றது என்றும் அந்த விதிகள் மனம் சார்ந்த விதிகள் என்றும் அவற்றுள் கட்டுப்பாட்டு விதி, செயல் விளைவு விதி, நம்பிக்கை விதி, எதிர்பார்க்கை விதி, ஈர்ப்பு விதி என்ற ஐந்து விதிகள் முக்கியமானவை என்றும் கடந்த இதழில் பார்த்தோம். இந்த விதிகளை மனம் சார்ந்த விதிகள் என்று கூறுகின்றோம் இவற்றின் முக்கியத்துவத்தை மேலும் விளங்கிக் கொள்வதற்கு 'மனம்' என்பதையும் அதன் பிரிவுகளையும் அவை தொழிற்படும் விதத்தினையும் விளங்கிக் கொள்வது சிறந்ததாகும்.

வாழ்க்கையில் வெற்றி என்பதும் தோல்வி என்பதும் வெளியில் அல்ல நமக்கு உள்ளே தான் இருக்கின்றது. அதாவது வெற்றியும் தோல்வியும் எமது மனத்தில்தான் தங்கியுள்ளது. ஒருவரது வாழ்க்கையில் என்ன என்ன விடயங்கள் நடைபெறுகின்றன என்பது பெருமளவிற்கு அவருக்குள் அதாவது அவரது மனதில் என்ன நடக்கின்றது என்பதன் அடிப்படையில் தான் இடம் பெறுகின்றன. எனவே வெளி உலகத்தில் நாம் அனுபவிக்கும் அனுபவங்கள் எல்லாம் எங்கள் மனதில் தோன்றும் எண்ணங்களின் வழிவந்தவையே ஆகும்.

இந்த உலகில் உள்ள ஒவ்வொருவருமே மிகப் பெரிய வெற்றிகளை அடையக்கூடியவர்கள். அதற்கு ஒவ்வொருவரும் செய்ய வேண்டியது தத்தமது மனக் கண்களை அகலத் திறந்து

- என். சிறிரஞ்சன் -



தங்களிடத்தில் நிரம்பிக் கிடக்கும் அளப்பரிய ஆற்றலினை அடையாளங்கண்டு கொள்வதாகும். காந்த சக்தி ஊட்டப்பட்ட இரும்பு தனது எடையிலும் பார்க்க பன்னிரெண்டு மடங்கு அதிக எடையினை தூக்கும் வல்லமை கொண்டது. ஆனால் அந்த இரும்புத் துண்டில் உள்ள காந்த சக்தியினை நீக்கி விட்டால் அதனால் ஒருசிறு துரும்பைக் கூட தூக்க முடியாது போய்விடும். இதேபோல் இந்த உலகிலுள்ள மக்களை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். முதலாவது வகையினர் காந்த சக்தி கொண்ட அதனூடே தன்நம்பிக்கையையும் வாழ்க்கை தொடர்பில் நேர்மறையான கண்ணோட்டத்தினையும் கொண்டவர்கள். இவர்கள் தாங்கள் வெற்றிகளையும் சாதனைகளையும் குவிக்கப் பிறந்தவர்கள் என்று புரிந்து கொண்டு வாழ்க்கையை தமக்கும் பிறருக்கும் பயனுள்ள வகையில் வாழ்பவர்களாகக் காணப்படுவர்.

இரண்டாவது வகையினர் காந்த சக்தி இல்லாத இரும்புத் துண்டைப் போன்றவர்கள் இவர்கள் வாழ்க்கைத் தொடர்பில் சந்தேகமும் பயமும் கொண்டவர்களாகவே காணப்படுவர். இவர்களது வாழ்க்கையில் வாய்ப்புக்கள் வந்தாலும் அவற்றினைச் சரியாகத் தன்வயப்படுத்தி பயனடைய முடியாதவர்களாக இருப்பர். இலகுவாக விளங்கிக் கொள்வதற்காக நாம் உலகில் உள்ள மக்களை காந்த சக்தி கொண்டவர்கள் காந்த சக்தி இல்லாதவர்கள் என்று பிரித்திருந்தாலும் கூட உண்மையில் உலக மக்கள் இந்த இரண்டு துருவங்களுக்குமிடையில் பரவிக் காணப்படுகின்றனர். சிலர் காந்த சக்தி கொஞ்சமுமே இல்லாத வெறும் இரும்புத் துண்டுகள். இவர்களால் எதையுமே கவர்ந்திழுத்து தூக்க முடியாது. பலர் சிறியளவு காந்த சக்தியினைக் கொண்டவர்கள் இவர்களால் தமது எடையிலும் பார்க்க குறைந்த அளவு எடையினையே தூக்க முடியும். வேறும் சிலர் தமது எடையிலும் பார்க்க அதிக எடையினைத் தூக்கக் கூடியளவு காந்த சக்தி கொண்டவர்கள் என்று வேறுபட்டுக் காணப்படுகின்றனர்.

ஒருவரது காந்த சக்தியின் அளவு எதனில் தங்கியுள்ளது என்று நோக்கும்போது அது அவர் தனது மனதினை குறிப்பாக

அவரது உள் மனத்தினை விளங்கிக் கொண்டு அதனுள் புதைந்து கிடக்கும் அளப்பரிய சக்தியினை வெளிக் கொணர்வதில் தங்கியுள்ளது. அதன் மூலம் வாழ்க்கையில் பணம், தேக ஆரோக்கியம், மகிழ்ச்சி, வெற்றி என்பவற்றினை அடைய முடியும்.

ஒவ்வொரு மனிதருக்கும் ஒரு மனம் உண்டு. இந்த மனம் இரண்டு முக்கிய பிரிவுகளைக் கொண்டது. அவற்றில் முதலாவது வெளி மனம் அல்லது நினைவு மனம் (Concious



mind) எனப்படுகின்றது. மற்றையது உள்மனம் அல்லது ஆழ்மனம் (Subconcious mind) எனப்படுகின்றது. இந்த இரண்டு மனங்களின் தன்மை அவை தொழிற்படும் விதம் என்பவை வேறுபட்டவை ஆகும்.

உள் மனத்தினை ஒரு விளை நிலத்திற்கு ஒப்பிட்டால் வெளி மனத்தினை அந்த விளை நிலத்தில் பயிரிடும் விவசாயிக்கு ஒப்பிடலாம். இந்த விளை நிலத்தில் விவசாயியினால் விதைத்து பராமரிக்கப்படும் பயிர்கள் முளைத்து வளர்ந்து விளைச்சலைத் தரும். விவசாயி பயிரிடும் பயிர் எதுவாக இருப்பினும் அதாவது அது நச்சுச் செடியாக இருப்பினும் சரி அல்லது பயன்தரும்

நாம் முடிவெடுக்க முடியாமல் தள்ளிப் போடுவதைச் சிலர் பொறுமை என்று தவறாக நினைத்துவிடுகின்றனர்.

- ஹென்றி ஃபோர்டு

பழமரமாக இருப்பினும் சரி விளைநிலம் எந்தப் பாகுபாடுமின்றி அது முளைத்து வளர்ந்து விளைச்சலைத் தரக் காரணமாக இருக்கும். இதேபோல் விளைச்சல் நிலமான உள் மனதில் நாம் எண்ணங்கள் என்ற விதையினை நாள் பூராகவும் விதைத்துக் கொண்டே இருக்கின்றோம். இந்த எண்ணங்களினால் நிலவரங்கள் அல்லது சூழ்நிலைகள் உருவாகின்றன. வெளிமனத்திற்கும் உள்மனத்திற்கும் இடையிலான மிக முக்கிய வேறுபாடு யாதெனில் உள்மனத்தினால் ஒன்றினை ஆராய்ந்து பார்த்து அது சரியா பிழையா அல்லது நல்லதா கெட்டதா என்று பிரித்துப் பார்க்க முடியாமையாகும்.



## வெளி மனமும் உள் மனமும்

வெளி மனம் என்பது சிந்திக்கும் மனம் இந்த மனத்திற்கு ஞாபகசக்தி கிடையாது இதனால் வெளிமனத்தினால் ஒரு நேரத்தில் ஒரு விடயத்தை மட்டுமே வைத்துக் கொள்ள முடியும். வெளி மனம் நான்கு தொழிற்பாடுகளை மேற்கொள்கின்றது. முதலாவது தொழிற்பாடு தகவல்களை அடையாளம் கண்டு கொள்வதாகும். பார்த்தல், கேட்டல், முகர்தல், சுவைத்தல், தொடுதல் மற்றும் உணர்தல் மூலம் தகவல்கள் வெளிமனத்தினால் அடையாளம் காணப்படுகின்றன. இதன் இரண்டாவது தொழிற்பாடு தன்னால் அவதானிக்கப்பட்ட தகவல்களை ஒப்பீடு செய்தல் ஆகும். உள் மனதில் பதிவு செய்யப்பட்டிருக்கும் கடந்த கால தகவல்கள் மற்றும் அனுபவங்களுடன் புதிய தகவல்கள் ஒப்பீடு செய்யப்படும். அவ்வாறு ஒப்பீடு செய்யப்பட்ட தகவல்கள் ஆய்வுக்கு உட்படுத்தப்படல் வெளிமனத்தின் மூன்றாவது தொழிற்பாடாகின்றது. இவ்வாறு அடையாளம் காணப்பட்டு ஒப்பீடு செய்யப்பட்டு ஆய்வுக்குட்படுத்தப்பட்ட தகவலானது ஆய்வின் அடிப்படையில் தீர்மானம் ஒன்று மேற்கொள்ளப்படும். இதுவே வெளிமனத்தின் நான்காவது தொழிற்பாடாகும்.

வெளி மனதினால் மேற்கொள்ளப்பட்ட தீர்மானமானது உள் மனத்திற்கு மாற்றப்பட்டு அங்கு பதிந்து வைக்கப்பட்டிருக்கும். அந்தத் தீர்மானத்தினைக் கட்டளையாக ஏற்றுக்கொண்டு அதனை நடைமுறைப்படுத்தும் கருமத்தினை உள்மனம் மேற்கொள்கின்றது. வெளிமனத்தினால் எடுக்கப்பட்ட தீர்மானம் சரியாக இருப்பினும் சரி பிழையாக இருப்பினும் சரி நல்லதாக இருப்பினும் சரி கெட்டதாக இருப்பினும் சரி அந்த தீர்மானத்தினை தனக்கு இடப்பட்ட கட்டளையாக ஏற்றுக்கொண்டு தனது ஞாபகப் பிரிவில் பதிவு செய்து வைப்பதும் தேவைப்படும் போது அதற்குரிய வகையில் நடவடிக்கைகளை மேற்கொள்வதும் உள் மனத்தின் வேலையாகும்.

உள்மனம் மிகப் பெரியளவு ஞாபக சக்தியினைக் கொண்டது. இதனது இயலளவிற்கு வரையறையே இல்லை. ஒருவரது வாழ்க்கையில் நடைபெறும் விடயங்கள் எல்லாவற்றினையுமே உள்மனம் நிரந்தரமாக பதிவு செய்து வைத்து விடுகின்றது. உள்மனதின் தொழிற்பாடு பதிந்து வைத்தலும் தேவைப்படும்போது அவற்றினை எடுத்துப் பயன்படுத்தலுமாகும். அதாவது வெளிமனத்தினால் விடுபடும் கட்டளைகளை பதிந்து வைத்து அதன்படி செயற்படுவது உள்மனத்தின் செயற்பாடாகும். வெளிமனதால் வழங்கப்பட்ட கட்டளைகள் நல்லவையா? கெட்டவையா? சரியானவையா? அல்லது தவறானவையா? என்று சீர்தூக்கிப் பார்க்கும் வல்லமை உள்மனத்திற்கு கிடையாது என்ற வகையில் அது வெளிமனதின் 100% நம்பிக்கைக்குரிய சேவகராக அவற்றினை ஏற்றுக் கொண்டு நடைமுறைப் படுத்தும் வகையில் செயற்படுகின்றது.

நாம் கடந்த இதழில் பார்த்த விதிகளின் இருப்பிடம் உள்மனமாகும். குறிப்பாக ஈர்ப்பு விதியின் இருப்பிடமாக இது அமைவதனால் ஒருவரது எண்ணங்களை நடைமுறைப்படுத்தும் வகையில் அவற்றுடன் தொடர்புடையவற்றினைக் கவரும் வகையில் மன அலைகளை வெளிப்படுத்தத் தொடங்குகின்றது. உதாரணமாக நீங்கள் குறிப்பிட்ட விடயமொன்றினை உங்களினால் அடையமுடியும் என நம்பினால், உடனடியாக உங்களது உள்மனம் அதனை நடைமுறையில் அடைவதற்குரிய மனோசக்தியினை வெளிப்படுத்தி அது தொடர்பான ஆட்களையும் சூழ்நிலைகளையும் உங்களை

நோக்கி ஈர்க்கும் கருமத்தில் உடனடியாக இறங்கி விடுகின்றது.

உதாரணமாக நீங்கள் வெளிநாட்டுப் பயணம் ஒன்றினை மேற்கொள்வது பற்றி முடிவு செய்திருப்பீர்களேயானால் உடனடியாக வெளிநாட்டுப் பயணம் தொடர்புடைய விளம்பரங்கள், கட்டுரைகள், தகவல்கள், போன்றவற்றினை செல்லும் இடங்களில் எல்லாம் பார்க்கவும் கேட்கவும், தொடர்பு கொள்ளவும் தொடங்குவீர்கள். அதாவது நீங்கள் செய்ய வேண்டும் என்று எண்ணிய விடயத்தினை நடைமுறையில் அடைவதற்குரிய விடயங்களில் உங்கள் கவனத்தினை ஈர்க்கும் செயற்பாட்டினை உள்மனம் மேற்கொள்கின்றது. எனவே வாழ்க்கையில் நீங்கள் அனுபவிக்கும் விடயங்கள் அவை மகிழ்ச்சிகரமானவையாக இருப்பினும் சரி, துக்ககரமானதாக இருப்பினும் சரி அவற்றின் தோற்றிடம் உங்களது மனமே. இந்த உண்மையினைப் புரிந்து கொள்வதன் மூலம் வாழ்க்கையினை மகிழ்ச்சிகரமானதாகவும் பயனுள்ளதாகவும் மாற்றிக் கொள்ளலாம்.

எனவே ஒன்றினை அடைவதற்கு முதலில் செய்ய வேண்டியது அது தொடர்பில் உங்களது எண்ணங்களை ஒருமுகப்படுத்துவதாகும். பரீட்சாத்தமாக ஒரு நாளில் அந்தநாள் முழுவதும் இரவு பகலாக நீங்கள் அடைய விரும்பும் ஒன்றுபற்றி உங்களது எண்ணத்தினைக் குவித்துக் கொண்டு அது பற்றியே சிந்தித்துப் பாருங்கள்.



அதனை வெற்றிகரமாக அடைவது தொடர்பில் எந்தவிதமான ஐயமோ பயமோ கொள்ளாதிருத்தல் வேண்டும். அத்துடன் அந்த விடயம் தொடர்பில் மற்றவர்களுடன் உரையாடும்போது உற்சாகமாகவும் நம்பிக்கையுடனும் இருத்தல் அவசியமாகும். குறிப்பாக நித்திரைக்குப் போக முன்னரும் நித்திரையினால் எழும்பியவுடனும் நீங்கள் அடைய விரும்பும் விடயத்தினை உங்களிற்கு நீங்களே திரும்பத் திரும்ப சொல்லிக் கொள்ளுங்கள்.

ஒருவர் தற்போது எந்த நிலையில் இருந்தாலும் தனது வாழ்க்கையினை வெற்றிகரமானதும் மகிழ்ச்சிகரமானதுமாக மாற்றிக் கொள்ள முடியும். மனதின் தன்மை இதனைச் சாத்தியமாக்கின்றது. எவ்வாறெனில் வெளிமனத்தினால் ஒரு



## படித்ததில் பிடித்தது...

முடி திருத்தப் போனார் அவர். முடி திருத்திய நண்பருடன் பேச்சுக் கொடுத்தார். பல விடயங்களைப் பற்றியும் பேசியவர்கள் வறுமை குறித்து விவாதித்தார்கள். "உணவு, இருப்பிடம் இல்லாமல் இத்தனை பேர் இருக்கிறார்கள். கடவுளே இல்லை" என்றார் முடிதிருத்தும் நண்பர். அவரை வெளியே அழைத்தார் இவர். தாடியோடு படுத்திந்தவனைக் காட்டி "உலகில் முடிதிருத்துபவர்களே இல்லை" என்றார்.

தங்கள் வறுமையைத் தீர்த்துக்கொள்ள முயலாதவர்களைப் பார்த்து கடவுளே இல்லை என்று சொல்வது, தாடி மீசை வைத்திருப்பவர்களைப் பார்த்து முடி திருத்துபவர்களே இல்லை என்று சொல்வதைப் போல என்றொரு புதிய விடயத்தைக் கொடுத்தார் இவர்.



மகிழ்ச்சிகரமான விடயங்களைப் பற்றி சிந்தித்தல் போன்றவையும் மனதில் தொடர்ச்சியாக நேர்மறையான எண்ணங்களைப் பேணுவதற்கான வழிமுறைகளாகும். இவற்றுடன் 'என்னை நான் நேசிக்கின்றேன்', 'என்னை நான் நேசிக்கிறேன்' என்று திரும்பத் திரும்ப சொல்லிக் கொள்ள வேண்டும். அவ்வாறு தொடர்ச்சியாக சொல்லும் போது உங்கள் உள்மனத்தில் அது ஆழமாகப் பதியப்படுவதனால் தன்னம்பிக்கையும் உற்சாகமும் தோன்றும்.

உள்மனத்தின் தொழிற்பாட்டினையும் ஆற்றலினையும் நன்கு புரிந்து கொண்ட பல வைத்தியர்கள் தமது நோயாளிகளைக் குணப்படுத்துவதற்கு அதனை ஒரு சிகிச்சை முறையாகவே பயன்படுத்துகின்றனர். "ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு வகையிலும் நான் சிறந்த நிலையினை அடைவதனை உணர்கின்றேன்". என்று தனது நோயாளிகளைத் திரும்பத் திரும்பச் சொல்லச் செய்ததன் மூலம் Dr. Emmel Ho 1895 ஆம் ஆண்டிலேயே பல நோயாளிகளை குணமாக்குவதற்கு உதவினர்.

நோயாளிகள் குணப்படுத்துவது தனியே அவருக்கு வழங்கப்படும் மருத்துவ சிகிச்சைகளில் மாத்திரமின்றி தன்னால் குணமடைய முடியும் என்ற நம்பிக்கையினையும் எதிர்பார்க்கையினையும் அந்நோயாளிகளினது

நேரத்தில் ஒரு எண்ணத்தினை மட்டுமே வைத்திருக்க முடியும். எனவே எதிர்மறையான எண்ணங்கள் தோன்றும்போது உடனடியாக அவற்றினை நேர்மறையான எண்ணங்கள் மூலம் பிரதியீடு செய்ய முடியும். அதாவது உடனடியாக நேர்மறையான எண்ணங்களை மனதில் கொண்டு வருவதன் மூலம் எதிர்மறையான எண்ணத்தினை வெளியேற்றி விடலாம். இதனைத் தொடர்ச்சியாக மேற்கொள்வதன் மூலம் உள்மனத்தில் எதிர்மறையான எண்ணங்கள் பதிவு செய்யப்படுவதனைத் தடுக்கும் அதேநேரத்தில் நேர்மறையான எண்ணங்களைப் பதிந்து வைத்துக் கொள்ள முடியும்.

உங்களிற்கு ஒரு பிரச்சினை வரும்போது அந்தப் பிரச்சினையைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருப்பதினை விடுத்து அதற்குரிய தீர்வுகளைப் பற்றி சிந்திக்கத் தொடங்குங்கள். உங்கள் வாழ்க்கையில் துன்பமான நிகழ்ச்சி ஒன்று ஏற்பட்டு விட்டால் அதனை நினைத்து கவலைப்படுவதனை விடுத்து அடுத்து என்ன செய்ய வேண்டும் என்பது பற்றிச் சிந்தியுங்கள். குறிப்பாக கடந்தகால விடயங்களை நினைத்து கவலைப்படுவதனை தவிர்த்து எதிர்காலத்தில் செய்ய வேண்டிய விடயங்கள் தொடர்பில் உங்களது மனத்தினை ஈடுபடுத்துங்கள். உங்களுக்கு பிடித்த விடயங்களை மற்றும் பிடித்தவர்களைப் பற்றி நினைத்தல், எதிர்காலத்தில் செய்வதற்கு நீங்கள் எண்ணியுள்ள உல்லாசப் பயணம், விழாக்கள் போன்ற

உள் மனதில் பதிய வைப்பதன் மூலமுமே சாத்தியமாகின்றது. இந்த அடிப்படையில் தான் சிலர் தமது நோய் குணமாக வேண்டும் என்று நேர்த்தி வைத்து அதனை நிறைவேற்றுதல், பிராயச்சித்தங்கள் செய்தல், தாங்கள் முழுமையாக நம்பிக்கை வைத்திருக்கும் சமயப் பெரியார்கள் மற்றும் குருமார்கள் போன்றவர்களின் உதவியினை நாடுதல் போன்ற வழிகளில் நோய்களைக் குணமாக்கிக் கொள்ளவது பெருமளவிற்கு சாத்தியமாகின்றது.

ஒருநாள் மருத்துவர் ஒருவர் பொழுது போக்கிற்காக மீன்பிடிப்பதற்கு ஆற்றங்கரைக்குச் சென்றிருந்தார். சென்ற இடத்தில் திடீரென வயிற்றில் சுகவீனமுற்று இருந்த நோயாளி ஒருவருக்கு அவர் வைத்தியம் செய்ய வேண்டியதாயிற்று. நோயாளியைப் பார்த்தபோது அவர் வேதனையால் துடித்துக் கொண்டிருந்தார். ஆனால் மருத்துவரோ எந்தவித மருந்துகளையோ அல்லது மருத்துவ உபகரணங்களையோ தன்னுடன் கொண்டு வந்திருக்கவில்லை எனினும் புத்திசாலித்தனமான அந்த மருத்துவர் நோயாளியை தனது

> ஆற்றலை வெளிப்படுத்தும் வாய்ப்பு இல்லாவிட்டால், அந்த ஆற்றல் மதிப்பற்றுப் போய்விடும்.
>
> - நெப்போலியன்

கைகளினால் பரிசோதனை செய்ததுடன் பக்கத்துக் கடைக்குச் சென்று சிறிதளவு கோதுமை மாவை வாங்கி அதனை சிறு சிறு பொட்டலங்களாக கட்டி எடுத்து சில நிமிடங்களுக்கு ஒருமுறை அதனைத் தண்ணீரில் கரைத்து உட்கொள்ள வேண்டும் என்று கூறினார். நோயாளியுடன் இருந்தவர்கள் மருத்துவர் மிகவும் கைதேர்ந்த வைத்தியர் என்று நோயாளிக்குச் சொல்லியிருந்தனர். வைத்தியர் கொடுத்த கோதுமை மாவை மருந்து என முழுமையாக நம்பி அதனை இரண்டு முறை உட்கொண்டதுமே வலியினால் அலறிக் கொண்டிருந்த நோயாளி இப்போது தனக்கு வலி பெருமளவு குறைந்து உள்ளது என்றும் தன்னால் தனியாக வீட்டிற்கு நடந்து செல்ல முடியும் என்றும் கூறுமளவிற்கு அவரது நிலமையில் முன்னேற்றம் ஏற்பட்டிருந்தது. இங்கு அந்த நோயாளிக்கு மருந்தாக அமைந்தது கோதுமை மா அல்ல. பதிலாக பிரபல்யமான மருத்துவர் தனக்கு சிகிச்சை அளித்துள்ளார் எனவே தனது நோய் குணமாகி விடும் என்று அவர் முழுமையாக நம்பியிருந்தார். இந்த தகவலானது அவரது வெளி மனத்தினால் உள் மனதிற்கு அறிவிக்கப்பட்ட போது அவரது உள் மனம் உடனடியாகத் தொழிற்பட்டு அவரது நோய் எதிர்ப்பு சக்தியினை வெளிப்படுத்தியமையின் காரணமாக.

எனவே வெற்றியடைய விரும்பும் ஒவ்வொருவரும் மனதின் தன்மைகளையும் அது தொழிற்படும் விதத்தினையும் குறிப்பாக உள்மனதின் அளப்பரிய ஆற்றல்களையும் விளங்கிக் கொண்டு அதனை சரியான முறையில் பயன்படுத்திக் கொள்வதன் மூலம் வெற்றிமேல் வெற்றியடைந்து வாழ்க்கையினை மகிழ்ச்சிகரமானதாகவும் பயனுள்ளதாகவும் மாற்றிக்கொள்ள முடியும். ❖❖

வளரும்.



# தயக்கமின்றிப் பேசுங்களேன்

- எஸ்.அஞ்சலி -

நடுக்கம், வயிற்றிற்குள் ஏதோ பிசைவது மாதிரி... உடம்பெல்லாம் வியர்த்துக் கொட்டி... என்ன ஏதோ வியாதியின் அறிகுறி எனப் பார்க்கிறீர்களா? இல்லை. சின்னதாய் ஓர் இரண்டு நிமிடம் பேசுங்கள் என அழைக்கும் போது பலருக்கு ஏற்படும் உணர்ச்சிகள்தான் இவை.

அது அரங்கு நிறைந்த கூட்டம் முன் ஆகட்டும், அல்லது ஆறேழு பேர் சேர்ந்த சின்னக் குழு முன் ஆகட்டும் பேச எழுந்ததும் பலருக்குத் தொண்டை அடைத்து விடும். தனியொருவருடன் மணிக்கணக்கில் கதைப்பவர்கள் கூட ஓர் சபை முன் பேச வேண்டும் என்றதும் நிலைகுலைந்து போய்விடுகின்றனர். இதையே ஆங்கிலத்தில் stage fear என்று சொல்வார்கள்.

இது எதனால் ஏற்படுகின்றது? பயம். நல்லபடி பேசுவேனா? இந்த சபையில் எனக்கு அங்கீகாரம் கிடைக்குமா? ஏதும் தவறாகச் சொன்னால் சிரிப்பார்களே என்கின்ற பயங்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து நாம் சொல்ல வந்ததைக்கூட முழுமையாகச் சொல்ல விடாமல் பண்ணிவிடுகின்றன.

இது மாபெரும் பேச்சாளர்களாகத் திகழும் அனைவருக்கும் ஆரம்பத்திலிருந்த பயம்தான். பின் அவர்களால் எப்படி பேச்சுத் துறையில் மிளிர முடிந்தது. பயிற்சி. ஆம், மேடைப்பேச்சு பற்றிய சில நுட்பங்களைத் தெரிந்துகொண்டு பயிற்சி செய்தால் நீங்களும் ஓர் அறிஞர் அண்ணாவாகவோ, ஓர் சுகி சிவமாகவோ பரிமளிக்கலாம்.

சிலருக்கு இப்பேச்சுத் திறனானது, அவர்கள் வளர்ந்த சுற்றாடலினால் இயல்பிலேயே அமைந்து விடுகிறது. வசீகரமான வார்த்தைகளை அழகாகக் கோர்த்து, கேட்பவர்கள் சலிப்படையாமல் இருக்கும் வண்ணம் இவர்களின் பேச்சு இருக்கும். ஒவ்வொருவருக்கும் ஒரு தனிப்பாணி இருக்கும்.

அவர்களைப்போல நம்மால் பேச முடியவில்லையே என அவர்களுடன் நம்மை ஒப்பிட்டுப் பார்த்தே எம் முயற்சிக்கு முட்டுக்கட்டை போடுகிறோம். ஏன் நமக்கென்று ஒரு தனிப்பாணி அமைத்து நாமும் அவர்களில் ஒருவராக முயற்சிக்கலாமே.

நாம் ஏன் பேச்சாளனாக வேண்டும்? நாமென்ன அரசியலுக்குப் போகப்போகிறோமா? அல்லது கூட்டம் கூட்டி மேடை போட்டுப் பேசப்போகிறோமா? எமக்கேன் இந்த வேலை என நினைக்கிறீர்களா? இன்று எந்தத் துறைக்குப் போனாலும் ஓர் குழுவின் முன் நின்று ஓர் விடயத்தை விளங்கப் படுத்தும் (presentation) தேவை இருக்கிறது. அது மருத்துவத் துறையாகட்டும் அல்லது விளையாட்டுத் துறையாகட்டும். இந்த பேசும் நுட்பங்கள் தெரிந்திருந்தால் அது மிகவும் பயனுள்ளதாக அமையும். அத்துடன் இப்பேசும் கலையானது தலைமைப் பண்பின் ஓர் அம்சம்கூட.

இனி ஓர் பேச்சாளனாக எப்படி எம்மைத் தயார்ப் படுத்த வேண்டும் எனப் பார்ப்போம்.

நாம் பேச எடுத்துக்கொள்ளும் எந்த விடயமாக இருந்தாலும் அதைப்பற்றி முன்கூட்டியே முடிந்த அளவுக்கு

தெரிந்து கொள்வதாலும், மேலதிக தகவல்களைத் திரட்டிக் கொள்வதாலும் சபையில் அல்லது குழுவில் இருப்போரைவிட, விடயத்தைப் பற்றி அதிகமாகத் தெரிந்தவராக இருப்பீர்கள். இதன் மூலம் உங்களுக்கு அவையில் இருப்போரைவிட அந்த விடயத்தைப் பற்றி அதிகம் தெரிவதால் உங்களது தன்னம்பிக்கையின் அளவும் அதிகரிக்கும்.
தகவல்களைத் திரட்டாமல் பேச்சுக்களுக்குச் செல்வோருக்கு, அவையில் இருப்பவர்களுக்கு அதிகம் தெரியுமோ? நாம் தவறாக எதுவும் கூறிவிடுவோமோ? என்ற பயங்கள் உருவாகி அவர்களின் தன்னம்பிக்கையின் அளவைக் குறைத்துவிடும். முடிந்தளவிற்கு புத்தகங்கள் மூலமோ, தெரிந்தவர்கள் மூலமோ, இணையத்தளம் மூலமோ தகவல்களைச் சேகரியுங்கள். நீங்கள் பேசப்போகும் சபையோர் என்ன எதிர் பார்க்கிறார்கள் என்பதையும் முன்கூட்டியே அறிந்து கொள்வது உதவியாக இருக்கும்.



கிடைத்த தகவல்களை வைத்து சபையோருக்கு இலகுவில் விளங்கும் படியாக ஆரம்பம்/பிற்புலம் (introduction), உடல் உள்ளடக்கம் (Body), மற்றும் முடிவு (Ending) ஆகியவற்றைத் தயார் செய்து, இவற்றை எழுதிப் பார்ப்பதால் உங்களது நேரத்தையும் கணக்கிடுவதற்கு உதவியாக இருக்கும். ஆரம்பத்தில் இரண்டு மூன்று முறை ஒத்திகை பாருங்கள். தனியாகவோ அல்லது வீட்டில் இருப்பவர் யார் முன்போ இந்த ஒத்திகையைச் செய்யுங்கள்.

சரி, இப்போது என்ன பேசப்போகின்றோம் என்பதை தயார்ப்படுத்தி விட்டீர்களானால் அடுத்து சபையில் உங்களை எப்படிக் காட்டப் போகிறீர்கள் எனப் பார்ப்போம்.
மேடையில் உங்களுக்கென ஒதுக்கப்பட்ட நேரம் வரும்போது மேடைக்கு வந்தபின் பேச்சை ஆரம்பிக்கும் முன் ஞாபகத்தில் வைத்திருக்க வேண்டியவை இரு விடயங்கள். ஒன்று புன்னகை (smile), மற்றொன்று சபையோரின் முகம் பார்த்தல் (eye contact). இவ்விரண்டு செயல்களாலும் நீங்கள் சபையோரை மனதளவில் நெருங்கி விடுவீர்கள்.

சிறிய குழுவாக இருந்தால் அங்கிருக்கும் அனைவரது முகங்களை/ கண்களை நீங்கள் சுழற்சி முறையில் பார்ப்பது அவசியம். அங்கிருக்கும் எவரையும் நீங்கள் தவற விடக்கூடாது. சிறிய குழுவில் நீங்கள் முகம் பாராமல் யாரையாவது தவிர்த்தீர்களானால் அது நீங்கள் அந்த நபரை அலட்சியப்படுத்துகிறீர்கள் (ignore) என்பதாய் அமைந்து விடும். உண்மையில் அப்படி இல்லை என்றாலும் தவறானதொரு அபிப்பிராயத்தை அது கொடுத்து விடும்.

பெரிய சபையில் நீங்கள் பேசும்போது ஒவ்வொரு பகுதியிலும் உங்கள் பார்வையைச் செலுத்த வேண்டும்.

பாடசாலை மாணவர்கள் அதிகமாக தங்களது வேலைகளை ஆசிரியர், மாணவர் குழுவில் எடுத்து விபரிக்கும்போது (presentation),

ஆசிரியர்களின் முகத்தைத்தான் பார்ப்பார்கள். ஆசிரியர்தானே மதிப்பெண் வழங்கப் போகிறார் என்ற எண்ணத்திலேயே இப்படிச் செய்வார்கள். இது தவறானதாகும். அங்குள்ள எல்லா மாணவர்களையும் சபையோராக ஏற்று முகம் பார்த்துப் பேச வேண்டும்.

நமது பேச்சின் சத்தத்தின் அளவு எல்லோர்க்கும் கேட்கும்படியாக இருக்கிறதா என்பதை உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும். சிலர் மைக் இருந்தால் அது வேலை செய்கிறதா இல்லையா என்பதைக்கூடப் பாராமல் பேசத் தொடங்கி விடுவார்கள். தொடங்கிவிட்டோமே என்று எண்ணி சபையோருக்குக் கேட்கிறதோ இல்லையோ நிறுத்தாமல் தொடர்ந்து பேசுவார்கள். இடையில் பேச்சை நிறுத்தி, ஒலியைச் சரிசெய்வதில் எந்தத் தவறுமில்லை. அதுவே சிறந்தது.

ஒரு பேச்சின் ஆரம்பத்தில் எல்லோர் கவனமும் உங்கள் மீது இருக்கும். எனவே அந்த முதல் இரண்டு நிமிடங்கள் உங்கள் பேச்சு சுவாரசியமாக, அனைவரும் கவரப்படும்படியாக, சபையோரின் ஆர்வத்தைத் தூண்டுவதாக இருந்தால் தொடர்ந்து அவர்கள் உங்கள் பேச்சுடன் கட்டுண்டு இருப்பார்கள்.



பேச்சின்போது தரப்பட்ட விடயத்திற்குப் பொருத்தமான உதாரணங்கள், கதைகள், நகைச்சுவைகள் என்பவற்றை சேர்த்துக் கொண்டால், சபையோர் சலிப்படையாமல் இருப்பதுடன் பொருளை இலகுவில் புரிந்துகொள்ளவும் வசதியாக இருக்கும்.

முக்கியமாகக் கவனிக்கப்பட வேண்டிய அடுத்த அம்சம் உடலசைவுகள் (body language/gesture). இவை நாம் சொல்ல வரும் விடயத்திற்கு உயிர் ஊட்டுபவை. அளவுக்கு அதிகமான அங்க அசைவுகள் சபையோரின் கவனத்தைத் திசைதிருப்பிவிடும். ஆகவே அவற்றிலும் அளவு/கவனம் தேவை.

இறுதியாக முடிவுப் பகுதியில் புதிய விடயங்களைப் புகுத்தாமல், ஓரிரு முக்கியமான கருத்துக்களை மீண்டும் எடுத்துக் கூறி, வாய்ப்புக்கு நன்றி கூறி கரகோஷத்தினைப் பெற்றுக்கொள்ளுங்கள்.

மேலே கூறப்பட்ட நுட்பங்களும் போதிய பயிற்சியும் இருந்தால் எவரும் தயக்கமின்றி மேடையேறலாம்.
இனியென்ன, ஓர் இரண்டு நிமிடம் பேச
நீங்கள் தயார்தானே? ❖❖

## சிறக்கச் சிறு துளிகள்...

### எது வலிமை? எது வல்லமை?

வலிமை மிக்கவர்
உடலைப் பலமுள்ளதாக்குகிறார்
வல்லமை மிக்கவர்
உள்ளத்தைப் பலமுள்ளதாக்குகிறார்

வலிமை மிக்கவர்
மற்றவர்களின் பலவீனத்தை வெளிக்கொணர்கிறார்
வல்லமை மிக்கவர்
மற்றவர்களின் பலத்தை வெளிக்கொணர்கிறார்

வலிமை மிக்கவர்
பகைவர்களை வெற்றி கொள்கிறார்
வல்லமை மிக்கவர்
தன்னையே வெற்றி கொள்கிறார்

வலிமை மிக்கவர்
தோல்வியைத் தவிர்ப்பதில் குறியாயிருக்கிறார்
வல்லமை மிக்கவர்
தோல்வியிலிருந்தும் பாடம் பெறுகிறார்

வலிமை மிக்கவர்
சிலநேரம் பிறருக்கு அச்சம் கொடுக்கிறார்
வல்லமை மிக்கவர்
எல்லா நேரமும் பிறரின் அச்சம் துடைக்கிறார்



# வானமே எல்லை

இதழ் 05 - ஜுன் 2008

## உங்கள் பார்வையில்...

வானமே எல்லை தவறாது படித்து வருகிறேன். நல்ல விடயங்களைப் படிக்கும் போது மனதுக்கும் நிம்மதி கிடைக்கிறது. புதிய பாரதியின் கவிதைகள் ஒவ்வொன்றும் அற்புதம்.

இ.சரோஜினி, ஸ்காபரோ

ஓப்ராவை அவரது நிகழ்ச்சி மூலமாகத்தான் நாம் அறிவோம். அவரது கடந்த காலம் இவ்வளவு துயரமானது என்றும் அதை அவர் வெற்றி கண்டே இன்றய நிலைக்கு வந்தார் என்பதையும் வானமே எல்லையினூடாகத்தான் தெரிந்து கொண்டோம். மேலும் பல வெற்றியாளர்களின் கதைகளை தொடர்ந்து எழுதுங்கள்.

கஜன் ரட்ணகுமார், ரொறன்ரோ

வானமே எல்லைக்கு நான் கொடுத்தது இரண்டு டொலர்கள். ஆனால் அதில் கொடுக்கப்பட்டுள்ள விடயங்களோ விலைமதிப்பில்லாதவை. வாழ்க்கைக்குத் தேவையான, தரமான ஓர் சஞ்சிகை. தொடர்ந்தும் வெளிவர வாழ்த்துக்கள்.

ப. மூர்த்தி, ஸ்காபரோ

I have read the article about pain & pleasure. This really put us to think in perspective. Keep up your good work.

Antony Tharmalingam

My kids have started using your school success tips. They really work. This is a very good magazine for the whole family.

Nesan Thurairajah

அன்பான வாசகர்களே....................
உங்களுக்கென ஒதுக்கப்பட்ட இப்பகுதிக்கு இவ்விதழ் சார்ந்த உங்கள் கருத்துக்களை தபால் மூலமோ, மின்னஞ்சல் மூலமோ அனுப்பி வையுங்கள். வானமே எல்லையின் வளர்ச்சிக்கு உங்கள் கருத்துக்கள் உறுதுணையாக இருக்கும் என நம்புகிறோம்.

நன்றி




# நேரச் சிக்கனம் வெற்றிக்கு அவசியம்

**- சிறி நடராஜா -**

வாழ்க்கையில் வெற்றிபெற விரும்புகிறவர்கள் முதலில் செய்யவேண்டியது நேரத்தை சிக்கனமாகச் செலவழிக்கப் பழகிக் கொள்ள வேண்டும். நம்மில் பெரும்பாலோர் நேரத்தைப் பற்றிய உணர்வே இல்லாதவர்களாக இருக்கிறோம். பொழுது போக்கு ஒவ்வொருவருக்கும் அவசியம்தான். வேலை செய்த களைப்பிலிருந்து விடுபடுவதற்கு பொழுது போக்கு தேவைப்படுகிறது. ஆனால் பொழுது போக்குவதையே வேலையாக்கிக் கொள்ளக் கூடாது. இந்த மனப்பான்மையில் இருந்து விடுபடாமல் எவரும் வெற்றி பெறுவது சாத்தியமில்லை.

ஒரு மனிதன் எட்டு மணிநேரம் தூங்குவதாக வைத்துக் கொண்டால், வாழ்க்கையில் மூன்றில் ஒரு பகுதியை தூக்கத்திலேயே கழித்து விடுகிறான். எட்டு மணி நேரத்துக்கும் அதிகமாகத் தூங்குகிறவர்களின் கதை வேறு. இது போக, சாப்பிடும் நேரம், ஓய்வெடுக்கும் நேரம், பொழுது போக்கும் நேரம் என்பதையெல்லாம் கணக்கில் எடுத்துக் கொண்டால் வாழ்க்கையில் பாதிப் பகுதியைத்தான் மனிதன் பயனுடையதாக வாழ்கிறான் என்று கொள்ள வேண்டும்.

வாழ்க்கை என்பது நேரத்தை உள்ளடக்கியது. நேரத்தை நீக்கிவிட்டுப் பார்த்தால், வாழ்க்கை என்கிற ஒன்று இல்லை. ஆக வாழ்க்கை என்று நாம் குறிப்பிடுவது நாம் வாழ்கின்ற நேரத்தை மட்டும் தான். ஆகவே வாழ்க்கையை பயனுடையதாக ஆக்கிக் கொள்ள வேண்டுமென்றால், நேரத்தைச் சரியானபடி பயன்படுத்த நாம் கற்றுக் கொள்ள வேண்டும்.

"நாளையிலிருந்து நேரத்தை ஒழுங்காகப் பயன்படுத்தப் போகிறேன்" என்று சொல்பவர் எந்தக் காலத்திலும் நேரத்தை ஒழுங்காகப் பயன்படுத்தப் போவதில்லை. நாளையிலிருந்து என்று சொல்லுகின்றபோதே இன்றைக்கு என்னுடைய நேரத்தை ஒழுங்காகப் பயன்படுத்தப் போவதில்லை என்று அவர் பிரகடனம் செய்கின்றார் என்பதுதான் அதன் அர்த்தமாகும்.

ஒவ்வொரு நிமிஷத்தையும் நீங்கள் எப்படிப் பயன்படுத்துகிறீர்கள் என்பதைப் பொறுத்தே உங்களுடைய வாழ்க்கை முன்னேற்றம் அடைகிறது. ஆகவே நேரத்தை சிக்கனமாக, பயனுள்ள வகையில் பயன்படுத்த நீங்கள் தீர்மானிக்கின்ற வினாடியிலிருந்தே நேரத்தை பொறுப்புடன் செலவழிக்க ஆரம்பிக்க வேண்டும்.

நேரத்தை பயனுள்ள வகையில் பயன்படுத்த விரும்பும் ஒவ்வொருவரும் இந்தப் பயிற்சியினை மேற்கொள்ளலாம். ஒரு நாளில் எவ்வளவு நேரத்தை நீங்கள் வீணாக்குகிறீர்கள் என்று கணக்கெடுப்பதே இந்தப் பயிற்சியாகும்.

ஒவ்வொரு நாளும் படுக்கைக்குச் செல்லுமுன், இன்றைக்கு என்ன செய்தோம், ஒவ்வொன்றையும் எவ்வளவு நேரம் செய்தோம் என்று கணித்துக் கொள்ளுங்கள். எந்தச் சிறிய விஷயத்தையும் விட வேண்டாம். பிறகு பயனுள்ள விஷயங்களுக்கு செலவழித்த நேரம் எவ்வளவு, பயனற்ற விஷயங்களுக்கு செலவழித்த நேரம் எவ்வளவு என்று இரண்டு தலைப்புகளில் தனித்தனியாகப் பட்டியல் போட்டு, ஒவ்வொரு தலைப்பிலும் செலவழித்த நேரத்தை கூட்டிப் பாருங்கள்.

பயனற்ற காரியங்களுக்கு நீங்கள் செலவழித்த நேரத்தைப் பார்க்கும் போது அது உங்களிற்கே பிரமிப்பாக இருக்கும். பின்னர், பயனற்ற காரியங்கள் எவற்றையெல்லாம் நீங்கள் தவிர்த்திருக்க முடியும் என்று யோசித்துப் பாருங்கள். முதல்நாள் செய்த தவறினை மறுநாள் செய்வதில்லை என முடிவு செய்து கொள்ளுங்கள்.

மறுநாளும் முதல் நாள் போலவே பட்டியல் போடும் போது, பயனற்ற காரியங்களுக்கு நீங்கள் செலவழித்த நேரம் குறைவாக இருக்க வேண்டும். பயனுள்ள காரியங்களுக்கு

நீங்கள் செலவழித்த நேரம் அதிகமாக இருக்க வேண்டும். அப்படியானால், உங்களுடைய நேரத்தை நீங்கள் பயனுள்ள முறையில் செலவுசெய்ய ஆரம்பித்து விட்டீர்கள் என்பதனை உணர்ந்து கொள்ளலாம்.

நீண்டநாள் பழக்கங்களை உடனடியாகக் கைவிடுவது இலகுவானதல்ல. கொஞ்சம் கொஞ்சமாகத் தான் அவற்றினை மாற்றிக் கொள்ள வேண்டும்.

வாழ்க்கை என்பதே ஒரு கால நிர்ணயம் தான். ஆகவே எதைச் செய்தாலும் அதை கால நிர்ணயத்துக்குள் செய்வது அவசியம். எதிர்காலம் என்பது நம்முடைய வாழ்க்கையில் எஞ்சியுள்ள காலமாகும். இந்தக் காலத்தில் நாம் என்ன செய்யப் போகிறோம் என்பதைத் திட்டமிடுகின்ற போது, நேரத்தைக் கவனமாகக் கணக்குப் பார்த்துப் பயன்படுத்துவது அவசியமாகிறது.

இதில் உங்களுடைய நேரம் மட்டும் முக்கியமானதல்ல. நீங்கள் யாரைப் பயன்படுத்தி க்காரியம் செய்கிறீர்களோ, அவர்களுடைய நேரத்தையும் முக்கியமாகதாகக் கருத வேண்டும். ஏனெனில் நீங்கள் கொடுக்கின்ற வேலையினை அவர்கள் உரிய காலத்திற்குள் முடித்தால்தான் உங்களுடைய நோக்கம் பூர்த்தியாகும்.

நேரப்படி நாம் காரியம் செய்வதைப் போலவே, மற்றவர்களும் நேரப்படி காரியம் செய்கின்றவர்கள் என்று கருதிச் செயற்படப் பழகிக் கொள்ள வேண்டும். ஒருவர் நமக்காக ஒரு குறிப்பிட்ட நேரத்தை ஒதுக்கி இருந்தால் குறிப்பிட்ட அந்த நேரத்தில் அவரைச் சென்று சந்திக்க நாம் பழகிக் கொள்ள வேண்டும். காலம் தவறி நாம் அவரைச் சந்திக்கச் சென்றால், அடுத்த வேலைக்கு அவர் ஒதுக்கியுள்ள நேரத்தில் நாம் தலையிடுவதாக அர்த்தம். அதை அவரும் விரும்பமாட்டார் நமக்கும் நல்லதல்ல.

நம்மை மற்றவர்கள் சந்திக்க வருகின்ற போதும், இதே பழக்கத்தை நாம் கடைப்பிடிப்பது அவசியம். ஒரு குறிப்பிட்ட நேரத்தில் அவர் வரும்போது அவரைச் சந்திக்க நாம் தவறிவிடக் கூடாது. அவரைக் காக்க வைக்கின்ற போது அவருடைய நேரத்தை வீணாக்குகின்றோம் என்கிற குற்ற உணர்வு நமக்கு வர வேண்டும். இவையெல்லாம் நம்மை மற்றவர்கள் மதிக்கச் செய்கின்ற காரியங்களாகும்.

கடந்த காலத்தை நீங்கள் எப்படிச் செலவழித்திருந்தாலும் பரவாயில்லை. ஆனால் எதிர்காலத்தை சிக்கனமாகப் பயன்படுத்தக் கற்றுக் கொள்ளுங்கள். கடந்த காலம் கைநழுவிப் போன காலம். எதிர்காலம் உங்கள் கையில் இருக்கின்ற காலம். அதை நீங்கள் எப்படிப் பயன்படுத்துகிறீர்கள் என்பதைப் பொறுத்தே உங்களின் எதிர்கால வெற்றி அமையும். ❖❖

## படித்ததில் பிடித்தது...

தேர்வில் எப்படியாவது முதலிடம் பெறவேண்டும் என்ற முனைப்பு அந்தப் பள்ளி மாணவனுக்கு. எப்போதும் இன்னொரு மாணவன் கூடுதல் மதிப்பெண் பெற்று வந்தான். இருவருமே விடுதியில் தங்கியிருந்தனர். கூடுதல் மதிப்பெண் பெறும் மாணவன் தன் நேரத்தைவிட பதினைந்து நிமிடங்கள் கூடுதலாகப் படிப்பதைக் கண்டதும், இந்த மாணவன் இருபது நிமிடங்கள் கூடுதலாகப் படிக்கத் தொடங்கினான். அடுத்த தேர்விலேயே முதலிடத்தைப் பிடித்த அந்த மாணவன்தான் பிற்காலத்தில் புகழ் பெற்றுத் திகழ்ந்த சர் வால்மர் ரேலிவர்.



# உனக்குளோர் உலகம் உண்டு

உன்னையே அறிவாய் தம்பி
உனக்குளோர் உலகம் உண்டு
சின்னவன் என்று நீயும்
சினந்திடில் அதுவே குண்டு
மன்னவன் என்றே எண்ணு
மலையையும் சுமக்கும் சக்தி
தன்னிலே வந்து சேரும்
தடையெலாம் பொடியாய் ஆகும்!

மழையிலை என்றால் உந்தன்
மண்ணையே விட்டா செல்வாய்
உழுதுபண் பாடு செய்து
எருவொடு பசளை இட்டால்
மழைவரும் காலம் மீண்டும்
வளர்பயிர் பொன்னாய்க் கொட்டும்
அழுதிடத் துணிந்தால் உந்தன்
அழிவுதான் ஈற்றில் முட்டும்!

படிபடி மீண்டும் மீண்டும்
பாடங்கள் மனதில் நிற்கும்
கடியது கணக்கு என்றால்
கனவதாய் முடியும் காலை
விடியலில் எழுந்து தேற்றம்
விடையிடு வெற்றி தோன்றும்
நெடியதாய் நினைத்தால் ஒன்றும்
நிசமில்லை வாழ்வு மில்லை!

இருளது விளக்கும் சோதி
இலந்திரன் கலங்கள் எல்லாம்
குருடராய்ப் பெற்ற தில்லை
குறைவிலா முயற்சி என்ற
உருவிலே கண்டார் இந்த
உண்மைதான் ஞானம் என்பேன்!
அருவமும் உருவம் ஆகும்
அம்பிநீ சிற்பி என்பேன்!

எண்ணுதல் முதலில் வேண்டும்!
இயலிடத் துணிதல் வேண்டும்!
மண்ணுதல் தோறும் பிய்த்து
மடையென வாய்தல் வேண்டும்!
கண்ணுதல் போல வீச்சுக்
கருவியாய்ப் பகுத்து ஆய்ந்தால்
நண்ணுதல் ஆகும் வெற்றி
நாளிடும் சரிதம் தானே!

- புதிய பாரதி -



# குறிக்கப்படாத குறிக்கோள்கள்

- கிரி வரதராஜன் -

வாழ்க்கையில் உங்கள் குறிக்கோள்கள் என்ன? என்று யாரிடமாவது கேட்டால், ஒரு பெரிய பட்டியலே வைத்திருப்பார்கள் சிலர். டாக்டராக வேண்டும், கோடீஸ்வரனாக வேண்டும், பெரிய வீடு வாங்க வேண்டும், மேற்படிப்புப் படிக்க வேண்டும், சந்தோஷமான குடும்பம், அமைதியான வாழ்க்கை என இன்னும் எத்தனையோ பல விடயங்களை உள்ளடக்கியதாக இவர்களின் பட்டியல் இருக்கும்.

இவை எல்லாம் குறிக்கோள்களா? இல்லவே இல்லை. இவை அவரவர்க்குள்ள ஆசைகள் அல்லது விருப்பங்கள் எனலாம். இது அனைவருக்கும் உள்ளதே. விருப்பங்கள் எல்லாம் குறிக்கோள்களாகாது.

அப்படியானால் எதுதான் குறிக்கோள்? இந்தக் குறிக்கோளானது மிகவும் சக்திவாய்ந்தது. ஒரு காந்தம் போன்றது. எமது செயற்பாடுகளை தன்னை நோக்கி ஈர்க்கக் கூடியது. வாழ்க்கையில் எந்தப் பிரச்சனை, சிக்கல்கள் வந்தாலும் குறிக்கோள்கள் உறுதியாக இருக்குமானால், அவற்றிலிருந்தெல்லாம் மீண்டு எம் இலக்கை நோக்கிய பாதையில் எமது கவனத்தைத் திருப்ப பெரிதும் உதவுவதாக அமையும்.

எமது குறிக்கோள்களில் நாம் உறுதியில்லாமல், அசட்டையாக இருப்போமானால், வாழ்விலேற்படும் பல்வேறு சம்பவங்களால் எமது வாழ்க்கை திசை திருப்பப்பட்டு, அது இழுக்கும் போக்கில் எமது வாழ்க்கைப்

பயணமும் அமைந்துவிடும். எமது குறிக்கோள்கள் எவ்வளவுக்கு எவ்வளவு உறுதியாக இருக்கிறதோ, அவ்வளவுக்கவ்வளவு அந்தக் காந்த சக்தி வலுவாக இருக்கும். இழுப்பதற்கு இம்மாதிரியான காந்த சக்திகள் இல்லாததால் பலரின் வாழ்க்கை அவர்களுக்கு ஏற்பட்ட துன்பியல் நிகழ்வுகளால் மூழ்கடிக்கப்பட்டுள்ளது.

இன்னுமொரு சாரார் தங்கள் குறிக்கோள்கள் என்ன என்பதே தெரியாதவர்களாக, அதுபற்றி நிச்சயமற்றவர்களாக உள்ளனர். அல்லது குறிக்கோள்களே இல்லாதவர்களாகவும் உள்ளனர்.

ஹலி.்.பக்ஸ் துறைமுகத்திலிருந்து புறப்படும் கப்பலுக்கு லண்டன் துறைமுகத்திற்குச் செல்ல வேண்டும் என்று தெரிந்தால்தான் தனது பயணத்தை அத்திசை நோக்கிச் செலுத்த முடியும். சென்றடைய வேண்டிய இடம் தெரியாவிட்டால் அலைகடலில் அங்குமிங்கும் அலைந்து திரிய வேண்டியதுதான். குறிக்கோள்கள் இல்லாத வாழ்க்கையும், இலக்குத் தெரியாமல் புறப்பட்ட கப்பல் போன்றதே. கால ஓட்டத்தில் சிக்குண்டு திசை மாறி அர்த்தமற்றுப் போய்விடும்.

ஏன் சிலர் குறிக்கோள்கள் எதுவுமில்லாமல் இருக்கிறார்கள் என்று பார்ப்போமானால் நான்கு காரணங்கள் தெளிவாகின்றன.

ஒன்று குறிக்கோள் அமைத்தலின் முக்கியத்துவம் தெரியாமை. ஒருவர் வாழும் சூழலில் அவரின் குடும்பத்தவரோ அன்றி நண்பர்களோ எவரும் குறிக்கோள் பற்றியோ அதன் முக்கியத்துவம் பற்றியோ கதைக்காமல், அக்கறை கொள்ளாமல் இருப்பார்களேயானால் இயல்பாகவே அச்சூழலில் வளரும் எவருக்கும் அது பற்றி தெரியவர நியாயமில்லை. பல்கலைக்கழகங்களில்கூட குறிக்கோளின் முக்கியத்துவம் பற்றியோ அதை அமைக்கும் முறைகள் பற்றியோ கற்பிக்கப்படாத நிலையில், மிக உயர் பட்டங்கள் பெற்றவர்கள்கூட குறிக்கோள்கள் ஏதுமின்றி வாழ்க்கையை வீணடிக்கும் நிலை ஏற்படலாம்.

இரண்டாவது எப்படிக் குறிக்கோள் அமைப்பது எனத் தெரியாமை. அல்லது தமது ஆசைகளை, தங்களுக்கு ஏற்கனவே குறிக்கோள்கள் இருப்பதாய் தவறாக எண்ணிக் கொள்வது. எமது குறிக்கோள்கள் என்ன என்று தெரிந்து கொள்ள, நம்மை நாமே சில கேள்விகளைக் கேட்டுப் பார்க்க வேண்டும். எனது விருப்பங்களில் முதன்மையாய் உள்ளவை எவை? எந்தெந்த விருப்பங்களை அடைய நான் எதையும் செய்ய, விட்டுக்கொடுக்கத் தயாராக இருக்கிறேன்? இந்த விருப்பம் எனக்கு எவ்வளவு தூரம் முக்கியமானது? இது போன்ற கேள்விகளுக்கான விடையைத் தேடினால் உங்கள் வாழ்க்கையின் குறிக்கோள்கள் எவை என உங்களுக்குப் புலப்படும்.

மூன்றாவது காரணம் தோல்வி பற்றிய பயம். குறிக்கோள்களை அடைய முடியாவிட்டால் வரும் வேதனைகளைச்



சந்திக்கப் பயந்து பலர் குறிக்கோள்களே அமைப்பதில்லை. இவர்கள் ஓர் பாதுகாப்பான சூழலிலேயே எப்போதும் இருக்கப் பிரியப்படுவார்கள். சின்ன ரிஸ்க்கூட எடுக்கத் தயங்குபவர்கள் வாழ்க்கையில் முன்னேற்றம் காண முடியாது. இப்பொழுது எப்படி உள்ளனரோ எப்பொழுதும் அப்படியே இருப்பார்கள்.

இறுதியாக நிராகரிப்புப் பற்றிய பயம். நமது குறிக்கோள்களை எட்டத் தவறினால் எங்கே அடுத்தவர்கள் சிரிப்பார்களோ, விமர்சிப்பார்களோ என்ற தயக்கத்தால் குறிக்கோள் அமைப்பதையே தவிர்த்து விடுகின்றனர் பலர். இதற்கு என்ன செய்யலாம்? பொதுவாக நமது குறிக்கோள்களை எம்மை ஊக்குவிக்கக் கூடிய எமக்கு உதவக் கூடிய நபர்களிடம் மட்டுமே முன்கூட்டிச் சொல்வது சிறந்தது. எதிர்மறையாக விமர்சிப்பவர்களுக்கு அது தெரியாமலேயே இருக்கலாம்.

சரி, குறிக்கோள்களை இனம் கண்டாகி விட்டது. இனி அவற்றை அடைவது எப்படி?

குறிக்கோள்களை அடைவதற்கான முதற்படி, உங்கள் குறிக்கோள்களை ஒரு குறிப்பேட்டில் எழுதிக்கொள்வது. எனக்கு அவை என்னென்ன என்று தெளிவாகத் தெரியும். பின் எழுத வேண்டிய அவசியம் என்ன? என நீங்கள் நினைக்கலாம்.

அமெரிக்காவின் பிரபலமான ஹாவாட் பல்கலைக்கழகத்தில் 1979ம் ஆண்டு ஓர் கணக்கெடுப்பு மேற்கொள்ளப்பட்டது. அங்கு பயிலும் முகாமைத்துவ மாணவர்களிடம், அவர்களில் எத்தனை பேர் எதிர்காலம் குறித்த குறிக்கோள்களுடனும் அவற்றை அடைவதற்கான திட்டங்களுடனும் இருக்கிறார்கள் எனக் கேட்கப்பட்டபோது, 3 சதவீத மாணவர்கள் மட்டுமே எழுத்தில் எழுதப்பட்ட, தெளிவான குறிக்கோள்களைக் கொண்டிருந்தனர். 13 சதவீதத்தினர் குறிக்கோள்களுடன் இருந்தாலும் அவை எழுத்தில் எழுதப்படவில்லை. மிகுதி 84 சதவீத மாணவர்கள் குறிக்கோள்கள் எதுவுமற்று இருந்தனர்.



பத்து வருடங்களின் பின் 1989இல் அந்த மாணவர்களைப் பேட்டி கண்டபோது, எழுதப்படாத குறிக்கோள்களைக் கொண்ட 13 சதவீதத்தினர், குறிக்கோள்கள் எதுவுமற்ற 84 சதவீதத்தினரைவிட இரு மடங்கு சம்பாதிப்பது தெரிய வந்தது. ஆச்சரியமூட்டும் விடயம் என்னவென்றால் தெளிவாக எழுதப்பட்ட குறிக்கோள்களைக் கொண்ட 3 சதவீதத்தினர் மற்றய அனைவரிலும் பார்க்கப் பத்து மடங்கு சம்பாதித்துக் கொண்டிருந்தனர்.

இந்த ஆராய்ச்சியின் முடிவின்படி, குறிக்கோள்கள் எழுத்து வடிவில் இருக்கும் போது அது செயல் வடிவம் பெறுவது உறுதியாகிறது. எனவே குறிக்கோள்களை எழுதிக்கொள்ளங்கள்.

இவ்வாறு எழுதப்படும் குறிக்கோள்கள் தெளிவானதாக இருத்தல் அவசியம். உதாரணமாக, நான் நிறைய சம்பாதிக்க வேண்டும் என எழுதுவதற்குப் பதிலாக, ஒரு வருடத்தில் எனது வருமானத்தை இவ்வளவிலிருந்து இவ்வளவாக உயர்த்திக் கொள்ள வேண்டும் என துல்லியமாக எழுதுங்கள். இதன் மூலம் உங்கள் இலக்கு என்ன என்பது உங்களுக்குத் தெளிவாகத் தெரிவதுடன் அதை அடைவதும் சுலபமாக இருக்கும்.

தெரியாத ஊரில், எந்தவித வீதிக் குறியீடுகளும் அற்ற இடத்தில், வரைபடமும் இல்லாமல், பொதுவான சில குறிப்புகளைச் சொல்லி உங்களை ஓர் இடத்திற்குப் போகச் சொன்னால், அவ்விடத்தை அடைய உங்களுக்கு எவ்வளவு காலம் எடுக்கும்? அனேகமாக உங்கள் வாழ்நாள் முழுவதும். அப்படி இடையில் அவ்விடத்தை நீங்கள் அடைந்தால் அது அதிஷ்டவசமானதாகவே இருக்கும். இது போலத்தான் விலாவாரியாகக் குறிப்பிட்டு எழுதப்படாத குறிக்கோள்களை அடைவதும் பெரும் சிரமமாக இருக்கும்.

அடுத்து, இக்குறிக்கோள்கள் ஏன் உங்களுக்கு முக்கியமானவை என்பதை எழுதிக் கொள்ளுங்கள். இங்கே "ஏன்" என்ற காரணத்தைப் பொறுத்து "எப்படி" என்ற கேள்வியும் இலகுவாக்கப் படும். அதாவது நீங்கள் கொடுக்கும் காரணம் வலுவானதாய் இருக்கும் போது அதை எப்படியாவது அடைய வேண்டும் என்ற எண்ணம், அதற்கு என்ன வழி என்று கண்டுகொள்ளவும் உதவும்.

இனி குறிக்கப்பட்ட இக்குறிக்கோள்களை அடைவதற்கு என்னென்ன செய்ய வேண்டும் என்ற படிமுறைகளையும் அதிலேற்படும் பிரச்சனைகளை எவ்வாறு கையாள்வது என்பது பற்றியும் வரும் இதழில் விபரமாகப் பார்ப்போம். ❖❖

(இன்னும் வரும்)

# School Success

# 6



## Increasing empathy toward others

Empathy is the act of showing consideration, sympathy, and sensitivity to the needs of others. Empathy towards someone else can be shown by our words, facial expressions, body language, and our behaviour towards others. When we show empathy toward others, we are saying to someone else, "I understand what you're going through and I care about you." We usually show empathy towards others to provide support when someone is going through a difficult time. Needless to say, showing consideration to others and being sensitive to their feelings help build strong relationships.

Follow these steps to improve your ability to show empathy towards others:

1. Figure out how the person is feeling (sad, angry, nervous, worried etc.)? Watch the other person when they are describing their situation. Notice facial expression, tone of voice, and body movements. They all give you clues about how this person is feeling.

2. Listen carefully to what the person is saying. Try to follow the content of what they are saying.

3. Decide on ways to show that you understand what the person is feeling such as through a gentle touch or a concerned look or gesture.

4. Review the examples below of empathetic versus nonempathetic statements and actions.

**Examples of empathetic statements:**

- "You seem upset"
- "I understand how you feel"
- "I can imagine how that must be for you"
- "It sounds like you're going through a rough time"
- "I see what you are saying"
- "I understand"
- "I know what you mean"

**Actions or remarks that are nonempathetic:**

- offering unsolicited advice
- showing disapproval or disrespect
- responding in a judgmental way
- being long-winded
- taking sides
- changing the topic
- looking away while the person is talking

***- to be continued on page 26***

# MORAL STORY

1. As each bird flaps its wings, it creates an "uplift" for the bird following. By flying in a "V" formation, the whole flock adds 71% greater flying range than if the bird flew alone.

**Moral:** People who share a common direction and sense of community can get where they are going quicker and easier because they are traveling on the thrust of one another.

2. Whenever a goose falls out of formation, it suddenly feels the drag and resistance of trying to fly alone, and quickly gets back into formation to take advantage of the "lifting" power of the bird immediately in front.

**Moral:** If we have as much sense as a goose, we will stay in formation with those who are headed where we want to go (and be willing to accept their help as well as give ours to the others).

3. When the lead goose gets tired, it rotates back into the formation and another goose flies at the point position.

**Moral:** It pays to take turns doing the hard tasks and sharing leadership - with people, as with geese, we are interdependent with each other.

4. The geese in formation honk from behind to encourage those up front to keep up their speed.

**Moral:** We need to make sure our honking from behind is encouraging - not something else.

5. When a goose gets sick, wounded, or shot down, two geese drop out of formation and follow it down to help and protect it. They stay with it until it is able to fly again or dies. Then they launch out on their own, with another formation, or catch up with the flock.

**Moral:** If we have as much sense as geese we too will stand by each other in difficult times as well as when we are strong.

